REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 (7 காசுகள்) ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

மலர் 5] சென்னை: ஐப்பசி 10உ. சனி (26—10—57) ★ ★ வெளியீடு: ஐப்பசி 11உ. ஞாயிறு (27—10—57) [இதழ் 115

**சிந்திரித் தொழிற்சாலை ஊழியர்களுக்கு ரூ. 16-இலட்சம் கிடைக்கும்!**

'சிந்திரி உர உற்பத்தித் தொழிற்சாலையில் வேலை செய்யும் சுமார் 7,000 தொழிலாளர்களுக்கு இந்த ஆண்டு ரொக்கமாக ரூ. 16-இலட்சம் பட்டுவாடா செய்யப்படும்' என்று தொழிலாளர் சங்கத் தலைவர் தெரிவித்திருக்கிறார்.

ரூ. 12-இலட்சம் ரொக்கமாகவும், ரூ. 4-இலட்சம் தேசியத் திட்ட கடன் பத்திரங்களாகவும் வழங்கப்படுமாம்.

1957 அக்டோபர் 31-ந்தேதியன்று ஒரு ஆண்டு சர்வீஸ் உடைய அனைவருக்கும் இந்த 'அட்ஹாக்' தொகைகிடைக்குமாம்! ஒவ்வொரு தொழிலாளிக்கும் குறைந்த பட்சம் ரூ. 100 என்றும், அதிகப்பட்சம் ரூ. 300 என்றும் கணக்கிட்டு வழங்கப்படுமாம்!

# 'இலை மறைவில் மறைந்துள்ள பாம்பு போல்....'

## 'தென்னகத்தில் இந்தி திணிக்கப்படுகிறது'

## 'நேரடியாகத் திணிக்க வடவருக்குத் துணிவில்லை'

### 'மாற்றுக்கட்சிப் பத்திரிகைகளின் இருட்டடிப்பு நமக்கு இருவகையில் இலாபம்'

*கொருக்குப்பேட்டையில் அண்ணா முழக்கம்*

சென்னை, அக். 26—

"இலை மறைவில் மறைந்து இருக்கும் பச்சைப் பாம்பைப்போல —இங்கே மறைமுகமாக இந்தி திணிக்கப்படுகிறது. பச்சைப் பாம்பு இலை மறைவில் மறைந்துகொண்டிருந்தால் கண்ணுக்குத் தெரியாது; கண்ணுக்குத் தெரியாமல் மறைந்துகொண்டிருக்கும் அந்தப் பாம்பு, அருகில் சென்றவர்களைக் கண்ணில் குத்தும்—கையில் குத்தும் என்பார்கள். அதைப்போல, இன்றையத் தினம் கட்டாய இந்தி மிக மிக லாவகமாகப் புகுத்தப்படுவதைப் பார்க்கிறோம். ஆச்சாரியார் ஆட்சிக் காலத்திலே, 'பிள்ளைகள் இந்தி படித்துத்தான் தீர வேண்டும்' என்று உத்தரவு போட்டார்களே, அதைப்போல இன்றையத் தினம் நேரடியாக—கட்டாயமாக இந்தித் திணிப்பை அமுல் செய்ய அவர்களுக்கு—வட நாட்டினருக்குத் துணிவு இல்லை.

"நான் திருவண்ணாமலை மாநாட்டில் குறிப்பிட்டதை மீண்டும் உங்களுக்குச் சொல்லுகிறேன்—அந்தத் துணிவு, இந்த இந்தியத் துணைக்கண்டத்திலேயே ஆச்சாரியார் ஒருவருக்குத்தான் உண்டு; மற்றவர்கள், கட்டாய இந்தியைப் பச்சைப் பாம்பைப்போலத்தான்—மறைமுகமாகத் திணிக்கப் பார்ப்பார்கள். அதை எதிர்க்க வேண்டுமானால், தமிழர்கள் கட்டுப்பாடுடன், உணர்ச்சிகொண்டு வளர்ந்திருப்பதை வடநாட்டிற்கு உணர்த்த வேண்டும்.

"இதற்காகத்தான் அக்டோபர் 13-ந் தேதி நாடெங்கும் இந்தி எதிர்ப்பு நாள் கொண்டாடப்பட்டது. அன்றையத் தினம்—'நம்நாடு' அலுவலகத்திற்குக் கிடைத்துள்ள கணக்குப்படி சுமார் 700 இடங்களிலே கண்டனக் கூட்டங்கள் நடத்தப்பட்டிருக்கின்றன. இந்த நாட்டுப் பத்திரிகைகள் எதுவும் இதுபற்றி ஒழுங்காகச் செய்தி வெளியிடவில்லை; இதுபற்றி நான் எண்ணும்போது முதலில் வருத்தப்பட்டேன்; பின்பு மகிழ்ச்சியடைந்தேன்; முதலில் வருத்தப்பட்டதற்குக் காரணம்—700 இடங்களில் கூட்டம் போட்டு, இவ்வளவு நடந்திருக்கின்ற இதை, வட நாடு தெரிந்துகொள்ள முடியாமல் இருட்டடிப்பு செய்துவிட்டார்களே என்பதுதான்; மகிழ்ச்சியடைந்ததற்குக் காரணம்—பொதுவாக இப்பத்திரிகைகள் நம் செய்திகளை இருட்டடிப்புச் செய்வதில் இலாபம் உண்டு என்பது இப்போது தெரியவருவதுதான்.

"நாம் இங்கு கூட்டத்திலே பேசுவதையெல்லாம் பத்திரிகைகளிலே போட்டுவிட்டால் பலன் இல்லை; பிறகு இப்படிப்பட்ட கூட்டமாக மக்கள், நமக்குக் கூடமாட்டார்கள். நேரிடையாகப் பேச்சைக் கேட்டால்தான் உண்டு; பத்திரிகையிலே பேச்சைப் படிக்க முடியாது என்ற நிலைமை இருப்பதால்தான் நாள் தவருமல் கூட்டம் நடத்தினுலும் மக்களும் வருகிருர்கள்.',

—இவ்வாறு அண்ணா அவர்கள், நேற்று மாலை சென்னை கொருக்குப்பேட்டையில் நடைபெற்ற தி. மு. கழக—இளங்கோ படிப்பகத் திறப்பு விழாப் பொதுக்கூட்டத்தில் பேசுகையில் குறிப்பிட்டார்.

அவர் தொடர்ந்து பேசியதாவது:—

"எனக்கு முன் பேசிய நண்பர் அறிவழகன்—அமைச்சர் சுப்பிரமணியம் அவர்களின் முரண்பட்ட பேச்சுக்களை எடுத்துக் கூறினர்; அடுத்து நண்பர் கோவிந்தசாமி பேசுகையில்—'இது மட்டுந்தானு, இன்னும் சொல்லுகிறேன்' என்று—அறிவழகன் சொன்னதைவிட ஒருபடி மேலே சென்று, சுப்பிரமணியம் அவர்களின் முரண்பாடுகளைபற்றி உங்களிடம் சொன்னுர்; இவர்கள் இருவர் சொன்னதும் தவறு என்று நான் சொல்ல விரும்புகிறேன். அவரைப்பற்றி இவர்கள் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை.

"சுப்பிரமணியருக்கு ஆறுமுகம் என்ற ஒரு பெயர் உண்டு என்பதை நீங்கள் உணரவேண்டும். 'ஏறுமயில் ஏறி விளையாடுமுகம் ஒன்று; ஈசருடன் ஞான மொழி பேசுமுகம் ஒன்று......' என—இப்படி ஆறு முகங்கள் சொல்லுவார்கள்; அதைப்போல, நமது அமைச்சர் சுப்பிரமணியத்துக்கும் ஐந்தாறு மனம் உண்டு—'எந்த மனதைத் திறந்து எந்த இடத்தில் எப்படிப் பேசினுல் நல்ல பெயர் பெறலாம்' என்பது அவருக்குத் தெரியும்; வள்ளியைப் பார்க்கும்போது முருகன் எப்படிப் பேசுவாரோ, அதைப்போல அமைச்சர் சுப்பிரமணியம், 'இந்தியைத் திணிக்கமாட்டோம்' என்று இங்குள்ள மக்களிடம் சொல்லுகிருர்; வடநாட்டு இந்தி வெறியர்களைப் பார்க்கும்போது அவர், சூரபத்மனை பார்க்கும் முருகனைப்போலப் பயந்து, அவர்களுக்குச் சாதகமான ஒன்றைச் சொல்லுகிருர்; எங்களைப் பார்க்கும்போது, 'சும்மாவா விடுவேன், இந்த இந்தி வெறியர்களை' என்று கூறுவதைப்போலப் பேசுகிருர்.

"இன்று காலைகூட நான் அமைச்சரை நேரில் கண்டு பேசுகிற ஒரு சந்தர்ப்பம் வந்தது; அப்பொழுது, 'இந்தி' பற்றி அவரிடம் நான் கேட்டேன்—'இந்தியைத் திணிக்கவிடமாட்டோம்' என்று நீங்கள் காரைக்குடியில் பேசியிருப்பதாகப் பத்திரிகையில் செய்தி படித்தேன்—'தினத்தந்தி'யில் அந்தச் செய்தியைப் பார்த்ததால்—அப்படி நீங்கள் சொன்னது உண்மைதானு?' என்று அமைச்சரைக் கேட்டேன்—'இந்திபற்றி சர்க்கார் கொள்கைதான் என்ன என்பதை, வலியுறுத்திச் சொல்லிவிடுங்கள்' என்று கேட்டேன்; அப்பொழுது அவர் கூறியது, எனக்கு நம்பிக்கையூட்டுவதாக இருந்தது—'எல்லாக் கட்சியினரையும் கூட்டிக் கலந்து பேசி, இந்திபற்றி நமது கருத்து என்ன என்பதை உலகத்துக்கு எடுத்துக்காட்டலாம் என்று கருதியிருக்கிறேன்'—என்ருர். இதுவே நமக்கு—கோபுர உச்சியிலுள்ள கலசம் தானே கழன்று வந்து, வீட்டு வாயிற்படியில் அமர்ந்திருக்கும் வறியவன் கையில் கிடைத்ததைப்போல இருக்கின்றது.

"அமைச்சர் நல்லவர்தான். அடிக்கடி குரல் மாற்றுகிருரே என்றால், அவர் ஈடுபட்டிருக்கும் அலுவலுக்கும் அதிலே ஏற்படுகின்ற சலிப்புக்குமிடையேதான் அவர் இப்படிப்பட்ட வேறுபாடும் முரண்பாடும்கொண்ட பேச்சுக்களை அவ்வப்போது பேச நேர்ந்துவிடுகிறது.

"இப்படியெல்லாம், இந்தி திணிக்கப்படும்போதுதான் காங்கிரஸ்காரர்களுக்கு ரோஷ உணர்ச்சி அதிகரிக்கும்.

"அரசியல், பொருளாதாரத் துறைகளில் வடநாடு தென்னுட்டை அடிமைகொண்டிருப்பதை, தொடர்ந்து எதிர்த்து வருபவர்கள் யார் என்று பார்த்தால், தென்னுட்டில் தமிழர்களாகிய நாம்தான். ஆந்திரர்கள், தங்களுக்கு மாகாணம் கிடைக்காவிட்டால் ஆத்திரப்படுவார்கள்; அது கிடைத்துவிட்டால் அமைதியடைந்துவிடுவார்கள். கேரளரும், கன்னடியரும் அப்படித்தான். நாம் மட்டுமே கடந்த 20 ஆண்டுக் காலமாகத் தொடர்ந்து போராடி வருகிருேம்.

"இருபதாண்டுக்கு முன் ஆச்சாரியார் ஆட்சி நடத்தியபோது, பெத்துநாய்க்கன்பேட்டை காசி விசுவநாதர் கோயிலிலிருந்து 4-5 தொண்டர்களும், சில தாய்மார்களும், ஒருசில வாலிபர்களும், வயோதிகர்களும் ஈனக்குரலில் இந்தியை எதிர்த்து முழங்கிக்கொண்டு ஊர்வலம் சென்ற காலத்தில் இப்பொழுது இப்படிப்பட்ட—இவ்வளவு பட்டாளம் வரும் என்று நாங்கள் நம்பவில்லை. தொண்டைமண்டலம் உயர்நிலைப் பள்ளியில் நாங்கள் இந்தி மறியல் செய்தபோது, உண்மையிலேயே, எதிர்காலத்தில் நமக்கு இவ்வளவு ஆதரவு இருக்குமென எண்ணவில்லை.

"இப்பொழுது, வடநாட்டார் இந்தியைத் திணிக்கட்டும் பார்க்கலாம் என்று எண்ணும்வகையிலே நாம் சக்தியைப் பெற்றிருக்கிருேம்.

(4-ம் பக்கம் பார்க்க)

# காஷ்மீர் பற்றிய இந்தியாவின் வாதம்

## ஐ. நா. பாதுகாப்புச் சபை மதிக்கவில்லை

### மீண்டும் கிரகாமை அனுப்ப யோசனை

நியூயார்க், அக். 25—

காஷ்மீர் பற்றிய இந்தியாவின் கருத்துக்கள், ஐ. நா. பாதுகாப்புச் சபையில் மதிக்கப்படவில்லை; மணிக்கணக்காகக் கிருஷ்ண மேனன் எடுத்துரைத்த வாதங்கள் அத்தனையும் பயன் எதும் பெருதனவாகி விட்டன.

முன்பு, காஷ்மீர் விவகாரம் குறித்து மத்தியஸ்தம் காண அனுப்பப்பட்ட டாக்டர் பிராங்க் கிரகாம் என்பவரையே, மீண்டும் இந்தப் பிரச்சினைக்கு முடிவுகாண அனுப்பவேண்டும் என்று பிரிட்டன் தெரிவித்திருக்கிறது; இந்தக் கருத்தை அமெரிக்காவும் ஏற்றிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தியப் பிரதிநிதிக் குழுத் தலைவர் மேனன், இந்த யோசனை பிரச்சினைக்குத் தீர்வு காண ஒரு குறுக்கு வழி என்றும், இந்த வழியைத் தாங்கள் ஏற்பதற்கு இல்லை என்றும் கூறியிருக்கிருர்.

# மும்முனைப் போரில் உயிர் துறந்தத் தோழர் துணைவியாருக்கு நிதியளிப்பு

## காலை இழந்த ஆசிரியருக்கும் பண உதவி

### தூத்துக்குடியில் சிறப்புக் கூட்ட நிகழ்ச்சிகள்

13—10—57 நண்பகல் 1 மணியளவில் தூத்துக்குடி வந்து சேர்ந்த தோழர்கள் க. அன்பழகன் எம். எல். ஏ., சி. பி. சிற்றரசு ஆகியோரை, ஏராளமான கழகத் தோழர்கள் இரயில் நிலையத்தில் கூடி வரவேற்றனர். வேட்டுக்கள் அதிர, 'திராவிடநாடு திராவிடருக்கே' 'இந்தி ஒழிக' ஆகிய முழக்கத்தோடு, தலைவர்களுக்கு மாலை அணிவித்து அழைத்துச் சென்றனர்.

#### சிறப்புக் கூட்டம்

மாலை 5-30 மணியளவில், டெல்பின் தியேட்டரில், நகர துணைச் செயலாளர் இரா. கிருட்டினன் தலைமையில் சிறப்புக் கூட்டம் ஆரம்பமாயிற்று; முதலில் தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள், 'தத்துவ ஞானி சாக்ரட்டீஸ்' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினர்.

பின்னர் தோழர் எம். எஸ். சிவசாமி, மும்முனைப் போராட்டத்தில் உயிர்நீத்த தோழர் மந்திரம் அவர்களது துணைவியாருக்கும், ஒரு காலை இழந்த ஆசிரியர் குருசாமி அவர்கட்கும், தலைமைக்கழகம் அளித்த 500 ரூபாயுடன் நகரக் கழகச் சார்பில் ரூ. 50-ம் சேர்த்து தோழர் குருசாமிக்கு, கால்போடும் வகைக்கு தேவைப்பட்ட தொகையான ரூபாய் 300-ம்; தோழர் மந்திரம் அவர்களது மனைவியாருக்கு ரூ. 250-ம் அளித்தார்.

அடுத்து தோழர் க. அன்பழகன் அவர்கள் 'மறுமலர்ச்சி' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினர்; செயலாளர் ஜோசப் நன்றி கூறினர்.

இரவு 8 மணியளவில், சிவன் கோவில் முன்னிலையில், நகரக் கழகச் செயலாளர் தோழர் ஜோசப் தலைமையில் இந்தி எதிர்ப்பு நாள் பொதுக்கூட்டம் ஆரம்பமாயிற்று; இந்தி எதிர்ப்புத் தீர்மானம் வாசிக்கப்பட்டு, பலத்த கையொலியோடு நிறைவேற்றப்பட்டது.

முதலில், தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் இந்தி ஆதிக்கத்தின் கொடுமைகளைப்பற்றி விரிவாகப் பேசினர்.

அடுத்து, பல கிளைகள் சார்பில் கைத்தறித் துண்டுகளும், மலர் மாலைகளும் அன்பழகன், சிற்றரசு ஆகியோருக்கணிவிக்கப்பட்டன.

பின்னர், தோழர் க. அன்பழகன் அவர்கள் இந்தியின் கொடுமைகளை விளக்கி நீண்டநேர கருத்துரை ஆற்றினர்.

இரவு சுமார் 11 மணியளவில் கூட்டம் இனிது முடிந்தது.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 26—10—57 சனி


## 12 ஆண்டு சேவை!

கடந்த பன்னிரண்டாண்டு காலமாக ஐக்கிய நாட்டுச் சபை எனும் உலக மன்றம் செயல்பட்டு வந்திருக்கிறது. அவ்வுலக மன்றம், இன்னும் அதன் அடிப்படைக் குறிக்கோளை அடையவில்லை. அதை உருவாக்கியவர்கள் கொண்டிருந்த குறிக்கோளுக்கு மிகத் தொலைவிலேயே அம்மன்றம் இருந்து வருகிறது.

51 உறுப்பினர்களுடன் துவங்கப்பட்டது அம்மன்றம், இன்று அதில் 82 நாடுகள் இடம் பெற்றுள்ளன.

அம்மன்றத்தில் பொதுவுடைமைச் சீனு இடம் பெறவில்லை. ஆதிபத்திய உரிமையிழந்த பழைய சீனமே அதில் கொட்டமடித்துக்கொண்டுள்ளது.

புதிய சீனு பெற வேண்டிய உரிமையைப் பெற விடாது அமெரிக்கா தடுத்துக்கொண்டிருக்கின்றது. அதன் சொல் பலத்தால்தான் பழைய சீனுவும் அங்கு வீற்றிருக்கின்றது.

இதன்பலனாக, உலக மன்றம் வலிவிழந்து இருக்கிறது. உலக மன்றம் என்ற பெயருக்கும் அது உரிமை கொண்டாட முடியாது இருக்கிறது.

உலக மன்றத்தின் ஆய்வுக்கு வந்த முக்கியப் பிரச்சினைகள் எதுவும், எதிர்காலத்தில் சிறு பிணக்கிற்கும் இடமில்லாத வகையில் தீர்க்கப்படவில்லை. எதிலும் சிக்கல்தான். அனைத்திலும் பகை வளர்க்கும் பான்மைதான்.

சிக்கல் தீர்க்கப்படாதிருந்தாலும், பகை வளர்க்கும் பான்மை இடம் பெற்றிருந்தாலும், உலகப் பெரும்போர் மூண்டுவிடாது, அத்தீவினையைத் தள்ளிப்போட்டு வருவதில் உலக மன்றம் முழு வெற்றி பெற்றிருக்கின்றது என்பதை மறப்பதற்கில்லை. இத்திருப்பணிக்காக உலக மன்றம், உலக மக்களின் பாராட்டுதலுக்கு உரியதேயாகும்.

சென்ற ஆண்டில் உலக மன்றத்திற்கு ஒரு சோதனை ஏற்பட்டது. அத்தருணத்தில் உலக மன்றம் செயல்படத் தவறி இருந்தாலும், தாமதித்திருந்தாலும், இதற்குள்ளாக உலகம் பெரியதோர் சுடுகாடாகி இருக்கும். எங்கும் பேரழிவு, காட்சி தந்து கொண்டிருக்கும்.

இசுரேலை முன்தள்ளி, பிரிட்டனும்—பிரான்சும் சதிசெய்து எகிப்து மீது வலுச்சண்டை தொடுத்தது. ஒரு நொடியும் தாமதிக்காது உலக மன்றம் செயல்பட முனைந்தது. பிரிட்டனும்—பிரான்சும் தமது படைகளைத் திரும்பப் பெற்றன. உலகப் போராக மூளுவது தடுத்து நிறுத்தப்பட்டது.

அங்கேரிய மக்களின் எழுச்சியையும், அதை ஒடுக்க சோவியத் நாடு மேற்கொண்ட முறையற்ற செயலையும் கண்டு உலக மன்றம் செய்வதறியாது திகைத்துக் கிடந்தபோதிலும், அச்சம்பவங்களின் உண்மைகளை உலகத்திற்கு உணர்த்துவதில் உலக மன்றம் நற்பணி புரிந்திருக்கிறது.

உலக மன்றத்தின் அரவணைப்பில், பொதுவகையில் உலக மக்கள் அனைவருக்கும் நல்வாழ்வு தேடித்தரும் அமைப்புகள் சில சிறந்த பணிபுரிந்து வருகின்றன. அப்பணிகள் மூலம் உலக மன்றம், மக்களின் பாராட்டுதலுக்கு உரியதாகிறது.

ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும் பதினைந்து கோடி மக்கள் வாழும் பகுதிகள் தன்னாட்சி உரிமையின்றி இருந்துவருகின்றன. அதுபோன்றே, தர்மகர்த்தா அமைப்பின் பெயரால் ஏறத்தாழ இரண்டு கோடி மக்கள் அன்னியர் ஆட்சியில் வாழ்ந்துவருகின்றனர். இவ்விரண்டு பிரச்சினைகளிலும் கூடிய விரைவில் முடிவு காண உலக மன்றம் முனைய வேண்டும். இதில் ஏற்படக்கூடிய நல்ல முடிவு உலக மன்றத்தின் இன்றியமையாமையை மேலும் உயர்த்தத் துணை நிற்கும்.

உலக மன்றத்திற்கு இப்பொழுது புதிய அபாயம் ஏற்பட்டு இருக்கிறது. அதுதான், மத்தியக் கிழக்குப் பகுதியிலிருந்து கிளம்பிவரும் போர் மூட்டும் பகைச் செய்திகள்.

துருக்கியை அமெரிக்கா தாங்கிப் பிடித்துக்கொண்டு இருக்கிறது. சிரியாவை இரஷ்யா தூக்கிப் பிடித்துக் கொண்டிருக்கிறது. இதன் பலனாக, இரண்டு சிறிய நாடுகளும் ஒன்றை ஒன்று வம்புக்கு இழுத்துவருகின்றன.

உலக மன்றம் இருபெரும் அணிகளாகப் பிரிந்துகிடக்கிறது. ஒன்றுக்கு அமெரிக்காவும், மற்றொன்றுக்கு இரஷ்யாவும் தலைமை தாங்குகின்றன.

இவை இரண்டும் 'உடனிருந்து உறைதல்' பற்றி வானளாவப் பேசிவருகின்றன. அது கேட்பதற்கு இனிப்பாகவும் இருக்கிறது. இருந்தாலும், ஒரு இலட்சியத்தை ஒழித்து மற்றொரு இலட்சியத்தை நிலைநாட்ட வேண்டும் என்பதில் இரண்டும் பெருமுயற்சி செய்து வருகின்றன.

இந்த நிலை இருபெரும் வல்லரசுகளிடையேயும் இருந்து வரும்வரையில் உலக மன்றம், தனது அடிப்படைக் குறிக்கோளையெய்துவது என்பது இப்பொழுதைக்கில்லை. இப்பெரும் அரசுகளிடம் மனமாற்றம் ஏற்பட்டாலல்லாது, உலக மன்றம் நீடித்து உயிர்வாழ்வதும் முடியாது—உலக மக்களுக்கு நலம்புரிவதும் இயலாது.

## சட்டக் கல்லூரியில் சம்பளச் சலுகை

### பெண்கள், முஸ்லிம்கள், பின்தள்ளப்பட்டோருக்கு கிடைக்கும்

சென்னை, அக். 24—

பெண்கள் மற்றும் முஸ்லிம்கள் பின்தங்கிய வகுப்புகளைச் சேர்ந்தவர்களுக்கு, சட்டக் கல்லூரியில அரை சம்பளக் கல்விச் சலுகை கிடைக்கும் என்று, சட்டக் கல்லூரியின் புதிய விதிமுறைகள் கூறுகின்றன.

## சென்னை வானொலி நிலையத்தில் புதிய கருவி

### அகில இந்திய கருவிகளுக்காக நிறுவப்பட்டதாம்!

### மத்திய அமைச்சர் கேஸ்கர் கூறுகிறார்

புதுடில்லி, அக். 24—

சென்னையில் நிறுவப்பட்டுள்ள 100 கிலோவாட் சக்தி வாய்ந்த ஒலிபரப்புக் கருவி, சென்னை வானொலி நிலையத்திற்காக நிறுவப்பட்டது அல்லவாம்?

சென்னை, பம்பாய், டெல்லி ஆகிய மூன்று இடங்களிலும் இதுபோன்ற சக்திவாய்ந்த ஒலிபரப்புக் கருவி நிறுவுவது என்ற திட்டத்தின் ஒரு பகுதியாகத்தான் சென்னையில் அக்கருவி அமைக்கப்பட்டதாம்!

இந்தக் கருவிகள், அன்னிய நாடுகளுக்கான ஒலிபரப்புகளுக்காக நிறுவப்படுவனவாம்! இவை அகில இந்திய ஒலிபரப்புக்குப் பயன்படுவதே திட்டத்தின் நோக்கமாம்! அகில இந்திய ஒலிபரப்புகள் நாளுக்குநாள் அதிகரித்து வருகின்றனவாம்!

"எனவே, சென்னையில் நிறுவப்பட்டுள்ள 100 கிலோவாட் ஒலிபரப்புக் கருவி உபயோகப்படுத்தப்படும் விதம் குறித்து தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக்களை ஏற்பதற்கு இல்லை"

—இவ்வாறு டெல்லி தகவல் ஒலிபரப்பு இலாகா மந்திரி டாக்டர் பி. வி. கேஸ்கர் கூறியிருக்கிறார்.

சென்னையில் உள்ள அந்த ஒலிபரப்புக் கருவி, குறிப்பிட்ட அகில இந்தியக் காரியங்களுக்காகப் பயன்படுத்தப்படவிருப்பதுடன், தென்கிழக்கு ஆசியாவில் உள்ள தமிழ் மக்களுக்கு ஒரு முக்கியமான பணியாற்றவும் பயன்படுத்தப்படவிருப்பதாகவும் அவர் கூறியிருக்கிறார்.

குறிப்பு:—இந்த சென்னை 100 கிலோவாட் ஒலிபரப்புக் கருவி மூலம், 'விவித் பாரதி' என்ற இந்தி நிகழ்ச்சி ஒலிபரப்பப்படுவதைக் கண்டித்தும், அந்த கருவி பயன்படுத்தப்பட வேண்டிய முறை குறித்துத் திட்டம் தந்தும் நமது பொதுச்செயலாளர் அவர்கள் அகில இந்திய வானொலி டைரக்டர்-ஜெனரலிடம் அண்மையில், அறிக்கை ஒன்று தந்திருந்தது தெரிந்ததே.

## கேரளத்தில் சேரி ஒழிப்புத் திட்டங்கள்

### இந்தியப் பேரரசு தரும் உதவி

### 364 குடும்பங்களுக்கு குடிமனை அமைத்துத் தரப்படும்

புதுடில்லி, அக். 26—

சேரி ஒழிப்புக்காக கேரள சர்க்கார் வகுத்துள்ள 7 திட்டங்களுக்கு இந்திய சர்க்கார் அனுமதியளித்திருக்கிறார்கள். இவைகளில் திருவனந்தபுரம் நகர சபையின் ஆறு திட்டங்களும், ஆலப்புழை நகர சபையின் ஒரு திட்டமும் அடங்கும் இத்திட்டங்களுக்காக செலவு ரூ. 12,01,200 அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ரூ.6,00,600 மாநில சர்க்காருக்குக் கடனாக அளிக்கப்படும்; ரூ.3,00,300 மான்யமாகத் தரப்படும் ரூ.3,00,300 கேரள சர்க்கார், தங்கள் பங்கு மான்யமாகத் தர வேண்டும்.

தற்போது சேரிகளில் வசிக்கும் 364 குடும்பங்களுக்கு, இந்தத் திட்டங்களின்படி வீடு கட்டிக் கொடுக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

## நாடு தழுவிய விடுதலைக் கிளர்ச்சி

### அல்ஜீரிய தேசிய முன்னணி துவங்கியுள்ளது

### இருபதாயிரம் வீரர்களின் அணிவகுப்பு

டுனீஸ், அக். 24—

தேச முழுவதுமான ஒரு பெரும் கிளர்ச்சியைத் துவக்கியிருப்பதாக அல்ஜீரிய தேசிய விடுதலை முன்னணியின் டுனீஸ் அலுவலகம் தகவல் தந்திருக்கிறது.

கடந்த அக். 20-ந் தேதியன்று கிளர்ச்சி துவங்கப்பட்டதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

சுமார் 20,000 வீரர்கள் கிளர்ச்சியில் பங்கு கொண்டுள்ளனர் என்றும், இவர்களை அடக்கிவிடப் பிரெஞ்சு ஏகாதிபத்தியம் 4 இலட்சம் துருப்புகளை அனுப்பியுள்ளதாகவும் கூறப்படுகிறது.

அல்ஜீரிய விடுதலைக்காகப் 'புரட்சி' துவங்கப்பட்ட மூன்றுவது ஆண்டு விழாவை ஒட்டி இந்தப் புதிய விரிவான போராட்டம் துவக்கப்பட்டிருப்பதாக முன்னணி தெரிவிக்கிறது.

அல்ஜீரியாவில் குடியேறியுள்ள 20 இலட்சம் பிரெஞ்சுக்காரர்கள், பூர்வீகக் குடிகளான 80 இலட்சம் அல்ஜீரியர்களுக்குச் சுதந்திரம் கிடைக்கக்கூடாது என எதிர்க்கின்றனர் என்பதும, அல்ஜீரியாவை ஆண்டுவரும் பிரெஞ்சு ஏகாதிபத்தியம் விடாப்பிடியாக சுதந்திரம் வழங்க மறுத்துவருவதும், இந்தப் பிரச்சினையை ஒட்டி, பிரான்சில் மந்திரிசபை மாற்றங்கள் நித்திய நிகழ்ச்சியாகிவருவதும தெரிந்ததே!

## அமெரிக்காவின் பறக்கும் குண்டு

### 4,000 மைல் உயரத்திற்குப் பாய்ந்து சென்றதாம்!

வாஷிங்டன், அக். 25—

அதிக உயரம் பறக்கக் கூடிய அமெரிக்கக் குண்டு நான்குமுறை சோதனை செய்யப்பட்டு தோல்வியடைந்துள்ளது.

கடந்த 21-ந் தேதியன்று நடத்தப்பட்ட சோதனையில் 4,000 மைல் உயரத்திற்கு அமெரிக்க பறக்கும் குண்டு சென்றதாக 'எக்சாமினர்' என்ற ஏடு தெரிவித்துள்ளது.

சோதனை பசிபிக் கடலில் நடத்தப்பட்டுள்ளது. ரஷ்யச் செயற்கைச் சந்திரனைப்போல பூமியைச் சுற்றிவர இந்தப் பறக்கும் குண்டு செலுத்தப்படவில்லை; அதிக உயரத்திற்குச் செலுத்தப்பட வேண்டும் என்பதே நோக்கமாகும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## சென்னை மாநிலத்தில் மழை-விளைபயிர் நிலைமை

### சர்க்கார் தகவல்

சென்னை, அக். 24—

30—9—57-ந் தேதியுடன் முடிந்த இரண்டு வாரங்களில் முதல் பாதியில் சென்னை, சேலம், கோவை, திருநெல்வேலி மாவட்டங்களில் இலேசான மழை இருந்தது. செங்கற்பட்டு, வடாற்காடு, தென்னாற்காடு, தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம், நீலகிரி மாவட்டங்களில் மழை பலமாக இருந்தது. மதுரை மாவட்டத்தில் மிக அதிகமான மழை பெய்தது. கன்னியாகுமரி மாவட்டத்தில் மழை இல்லை.

இந்த இரு வாரங்களில்-பிற்பாதியில் மதுரை, திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களில் இலேசான மழை இருந்தது; கன்னியாகுமரியில் மழையில்லை.

தென்னாற்காடு, வடாற்காடு, செங்கற்பட்டு, சேலம், கோவை ஆகிய மாவட்டங்களில் சில பகுதிகளைத் தவிர எல்லா மாவட்டங்களிலும் நிலுவையிலுள்ள பயிர் பொதுப்படையாக நன்றாக இருக்கிறது.

தென்னாற்காடு, வடாற்காடு, சேலம், திருச்சி, திருநெல்வேலி, கன்னியாகுமரி, செங்கற்பட்டு, கோவை மாவட்டங்களில் நெல் அறுவடை பரப்பளவு அதிகம் இல்லை. தென்னாற்காடு, சேலம் மாவட்டங்களில் விளைச்சல் சாதாரணமாக இருந்தது; இதர மாவட்டங்களில் சாகுபடி சுமார்.

தென்னாற்காடு, திருச்சி, செங்கற்பட்டு, கோவை மாவட்டங்களில் ராகி அறுவடைப் பரப்பளவு அதிகம் இல்லை; தென்னாற்காடு மாவட்டத்தில் விளைச்சல் சாதாரணமாக இருந்தது; இதர மாவட்டங்களில் சாகுபடி சுமார்.

## கராச்சி பள்ளிகளில் வங்க மொழியில் போதனை

கராச்சி, அக். 23—

'பாகிஸ்தான் தலைநகரான கராச்சி பள்ளிக்கூடங்களில், இதுகாறும் உருது போதிக்கப்பட்டு வந்தது; இனி வங்க மொழியும் போதிக்கப்பட வேண்டும்' என்று, புதிய கல்வி மந்திரி ரஹ்மான் கான் உத்தரவிட்டிருப்பதாகத் தெரிகிறது.

'துவக்கப் பள்ளிகளிலும் இனி பாகிஸ்தானின் இரு தேசிய மொழிகளான உருது, வங்காளி இரண்டிலும் கல்வி போதிக்கப்படும்' என்று அந்த உத்தரவு கூறுகிறது.

மந்திரி தனது உத்தரவு உடனடியாக அமுலுக்குவரும் என்றும், கராச்சியில்மட்டும் சுமார் 20,000 வங்காள மாணவ-மாணவிகள் இருப்பதாகவும் தெரிவித்திருக்கிறார்.

## 7 கோடி பவுன்

### எகிப்து கோரும் நஷ்டஈடு

கெய்ரோ, அக். 21—

கடந்த ஆண்டு நவம்பரில் எகிப்து மீது, ஆக்ரமிப்பு நடத்தியதற்கு நஷ்டஈடாகப் பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய நாடுகளிடமிருந்து எகிப்து, 7 கோடி பவுன் வேண்டுமெனக் கோரியிருப்பதாக நிதி இலாகா அலுவலகம் தெரிவித்திருக்கிறது.

## 'நம் சம்மதமின்றி எவரும் நம்மீது இந்தியைத் திணித்துவிட முடியாது'

### கல்வி மந்திரி சுப்பிரமணியம் கூறுகிறார்

விருதுநகர், அக். 25—

"மாணவர்கள் எந்தக் காரியம் செய்தாலும், அதைத் தங்கள் சங்கங்கள் மூலம் தெரிவித்தால் அதற்குத் தனிமதிப்பு உண்டு.

"இந்தி வேண்டுமாவேண்டாமா என்பதை உங்கள் யூனியனில் விவாதித்து, எடுக்கிற முடிவை சர்க்காருக்குத் தெரிவித்தால், சர்க்கார் நிச்சயமாக உங்கள் வேண்டுகோளைக் கவனிக்கும்.

"நம்முடைய சம்மதம் இன்றி நம்மீது யாரும் இந்தியைத் திணித்துவிட முடியாது.

இவ்வாறெல்லாம மாநில கல்வி மந்திரி சுப்பிரமணியம், 20-10-57 அன்று விருதை செந்திக்குமார நாடார் கல்லூரி மாணவர் கூட்டத்தில் பேசுகையில் தெரிவித்திருக்கிறார்.



## கிழமத்தூரில் தி. மு. க. பொதுக்கூட்டம்

### சி. பி. சிற்றரசு, ஏ. கோவிந்தசாமி, எம். செல்வராசு கலந்து கொண்டனர்

15—10—57 மாலை 6-மணிக்கு, கிழமத்தூர் அ. இராமசாமி அரங்கில் தோழர் மாணிக்கம் இயக்கப் பாடல்களுடன் பொதுக்கூட்டம் துவங்கியது.

தோழர் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. அவர்கள் கொடி ஏற்றுவித்தார்; தோழர் த. இராமலிங்கம் தலைமை வகித்தார்.

தோழர்கள் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ., எம். செல்வராசு எம். எல். ஏ. ஆகியோருக்கு கிழமத்தூர் விவசாயப் பெருங்குடி மக்கள் சார்பில் வரவேற்பு இதழ் வாசித்தளிக்கப்பட்டு மலர்மாலைகள் சூட்டப்பட்டன.

பின் தோழர்கள் இரா. நாராயணன், தொ. பிச்சமுத்து, தி. கொ. சிங்காரம், என். டி. சமத் முதலியவர்கள் கழக இலட்சியங்களைப் பற்றிப் பேசினர்.

அடுத்து, தோழர் ஏ.கோவிந்தசாமி அவர்களும், தோழர் எம். செல்வராசு அவர்களும் வரவேற்புக்கு நன்றி தெரிவித்துவிட்டு, சட்டமன்றத்தில் தி. மு. க. பணி குறித்தும், காங்கிரஸ் ஆட்சியில் நாட்டில் உள்ள நலிவுகள் குறித்தும் விளக்கமாகப் பேசி பொது மக்கள் தி. மு. கழகத்திற்கு ஆதரவு கொடுக்கும்படி கேட்டுக் கொண்டனர்.

பிறகு தோழர் சி. பி. சிற்றரசு அவர்கள் வடவர் ஆதிக்கம், கட்டாய இந்தித் திணிப்பு முதலியவைகளைப் பற்றி விரிவாகப் பேசி, தி. மு. க. நடத்தப்போகும் இந்தி எதிர்ப்புப் போரில் அனைவரும் பங்குகொண்டு ஆதரவு அளிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

இரு சட்டமன்ற உறுப்பினர்களுக்கும், சி. பி. சிற்றரசு அவர்களுக்கும் பல கிளைக் கழகங்கள் சார்பிலும், தனி நபர்கள் சார்பிலும் மலர்மாலைகள் சூட்டப்பட்டன.

தலைவர் முடிவுரைக்குப்பின் செயலாளர் நன்றி நவில கூட்டம் இனிது முடிவுற்றது.

## வேம்படிதாளம் தி. மு. கழகப்பொதுக்கூட்டம்

### என். எஸ். இளங்கோ கலந்துகொண்டார்

18—10—57 மாலை 6½ மணிக்கு தி. மு. கழகச் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது; தோழர் நா. கந்தசாமி தலைமையில் தோழர்கள் கே. எஸ். மணி, கே. எஸ். அமுர்தம் ஆகியோர் பேசியபின், தோழர் என். எஸ். இளங்கோ அவர்கள் தி. மு. க. இலட்சியம் பற்றியும், இரண்டாவது திட்ட ஓரவஞ்சனைகளையும், சட்டமன்ற தி. மு. க. உறுப்பினர்கள் பணியினையும் விளக்கினர். பின்னர், இந்தித் திணிப்பு முறையைக் கண்டித்துப் பேசினர்.

## உப்பிலியக்குடி தி. மு. க. துவக்கவிழா

### சி. பி. சிற்றரசு கலந்துகொண்டார்

18—10—57 மாலை 6-மணிக்கு தி. மு. க. துவக்கவிழா தோழர் தி. கோவிந்தாசன் தலைமையில் நடைபெற்றது; தோழர்கள் சி. பி. சிற்றரசு, எஸ். நெடுமாறன், மு. வேலுச்சாமி, வைத்திலிங்கம் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

காவேரி நகர் வட்டக்குழுவில் அடங்கிய கிளைகளும், பிறமன்றங்களும் மலர் மாலைகளும் கைத்தறித் துண்டுகளும் பேச்சாளர்களுக்கு அணிவித்தன.

கூட்டத்தில் இந்தித் திணிப்பைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## வில்வக்குளம் தி. மு. க. கிளை 'துவக்க விழா

### என். வி. நடராசன் கலந்து கொண்டார்

காட்டுமன்னார்குடிக்கு அருகிலுள்ள வில்வக்குளம் கிராமத்தில் 15—10—57 மாலை 6-மணி அளவில், தி. மு. கழகக் கிளையின் துவக்கவிழாப் பொதுக்கூட்டம் வேலாயுதம் அரங்கில் தோழர் இரா. இராமலிங்கம் தலைமையில் நடைபெற்றது. கழகக்கொடியை தோழர் மா. மகாலிங்கம் ஏற்றிவைத்தார்; கழகக்கொள்கைகளை விளக்கி துணைப்பொதுச்செயலாளர் என். வி. நடராசன், லா. ந. இராமலிங்கம், பொன். சொக்கலிங்கம், சீனுவாசன், தில்லைநடனம், அய்யாத்துரை, வேலு, செங்குட்டுவன், மூர்த்தி, சந்திரகாசன், இராமய்யன், ஆகியோர் நீண்டநேரம் பேசினர்கள்.

## தோப்புத்துறை தி. மு. கழகப்பொதுக்கூட்டம்

### மு. கருணாநிதி, என்.எஸ்.இளங்கோ கலந்துகொண்டனர்

20—10—57 மாலை 6 மணியளவில், தோப்புத்துறை கடைத் தெருவில், தி. மு. கழகப் பொதுக்கூட்டம் தோழர் எம். இ. மொய்தீன் தலைமையில் நடைபெற்றது; தோழர்கள் மு. கருணாநிதி எம்.எல்.ஏ., என். எஸ். இளங்கோ, அன்பில்-தருமலிங்கம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

தோழர் என். எஸ். இளங்கோ பேசுகையில், தமிழகம் தன்னாட்சி பெற மக்கள் எத்தகையத் தொண்டினைச் செய்யவேண்டும் என்பது பற்றியும்; தோழர் அன்பில்-தருமலிங்கம் பேசுகையில் இந்தி மொழியின் வருகையினால் தமிழின் சீர்குலைவு பற்றியும், உப்பு சத்தியாக்கிரகம் நடந்த தோப்புத்துறையிலே தி. மு. க. இத்தகைய வளர்ச்சி பெற்றிருப்பது பற்றியும் பேசினர்.

அடுத்து தோழர் மு. கருணாநிதி அவர்கள் பேசுகையில் சட்டமன்ற நடவடிக்கைகள் குறித்தும், ஆட்சியாளரின் போக்குபற்றியும், கழக இலட்சியம் குறித்தும் விளக்கிப் பேசினர்.

கூட்டம் துவங்குவதற்கு முன்னால் கடற்கரைப் பகுதியில் உள்ள மீனவர்கள் தோழர் மு. கருணாநிதி அவர்களை வரவேற்று, தங்கள் பகுதியினரின் குறைபாடுகள் அடங்கிய வேண்டுகோள் ஒன்றை வழங்கினர். பின்னர், கருணாநிதி அவர்கள், அப்பகுதியில் கழகத்தின் கொடியை ஏற்றிவைத்துச் சிறிது நேரம் கழகத்தின் இலட்சியத்தை எடுத்துச் சொன்னார்கள்.

### வேதாரண்யம்:

பின்னர் இரவு 8-30 மணியளவில் வேதாரண்யம் பூங்காவில் ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் தோழர் சிவ. கனகசுந்தரம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது; தோழர்கள் அன்பில்-தர்மலிங்கம், என். எஸ். இளங்கோ பேசியபின் மு. கருணாநிதி அவர்கள் கழகத்தின் இலட்சியங்களையும், கழகத்தின் சட்டசபை நடவடிக்கைகளையும் எடுத்துக் கூறினர்கள். செயலாளர் அய்யாத்துரை நன்றிகூற கூட்டம் இனிது முடிந்தது.

## நிலக்கோட்டை வட்டார விவசாயிகள் முன்னேற்ற சங்கம்

நிலக்கோட்டையில், 16-9-57-ல் மேற்படி சங்கம் அமைக்கப்பட்டது; கீழ்க்கண்டவர்கள் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—செயலாளர்: சையது இப்ராகிம்; துணைச்செயலாளர்: எம். பொன்னப்பன்; மாவட்டப் பிரதிநிதி: இ. காத்தான்; பொருளாளர்: அங்குசாமி; மற்றும் 7-பேர் நிர்வாக உறுப்பினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

## இந்தி ஏகாதிபத்தியத்திற்கு எதிராக கல்லூரிக் காளையர் அணிவகுப்பு

கடந்த 16—10—57 அன்று, அண்ணாமலைப் பல்கலைக்கழக மாணவர்கள் இரண்டாயிரம் பேர் வரை இந்தி ஏகாதிபத்தியத்திற்கு எதிராக, அணிதிரண்டு கல்லூரி செல்லாமல், நடத்திய ஒரு மாபெரும் கண்டன ஊர்வலத்தின் ஒரு காட்சி.

## 'பஞ்சப்படியைச் சம்பளத்துடன் சேர்த்துத் தருக'

### 'நிரந்தரமான 'போனஸ்' ஏற்பாடு வேண்டும்'

### 'தற்காலிகத் தொழிலாளிகளை நிரந்தரமாக்குக'

### உடுமலை திராவிட பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத் தீர்மானங்கள்

22—10—57-ல் நடைபெற்ற உடுமலை திராவிட பஞ்சாலைத் தொழிலாளர் ஆண்டுவிழாவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் வருமாறு:—

தாயகத்தின் விடுதலை பெறும் பணியில் ஈடுபட்டுள்ள தி. மு. கழகம் திராவிடத்தில் வாழும் பஞ்சாலைத் தொழிலாளர்களாகிய எங்களுக்கும், ஏனைய தொழில் பகுதியினருக்கும் உதவி செய்யும் முகத்தான் இரண்டாவது மாநில மாநாட்டிலே தீர்மானித்திருப்பதை மனமகிழ்ந்து இக்கூட்டம் வரவேற்று நன்றி தெரிவித்துக் கொள்கிறது.

தி. மு. கழகம் இனி மேலும் ஆங்காங்கு திராவிடத்திலுள்ள நாட்டுப்பற்றுமிக்க தொழிலாளர்கள் ஆரம்பிக்கும் சங்கங்களுக்கும் இயக்கங்களுக்கும் உதவியும் விளக்கமும் அளிக்குமாறு இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

நாம் வாழும் தாயகத்திற்கு மொழியின் வழி 'தமிழ்நாடு' என்று பெயர் வைக்க நாட்டிலுள்ளோர் அனைவரும், கேட்டும் மறுத்துவரும் சென்னை அரசினர்—டெல்லி மத்திய அரசினரின் போக்கைக் கண்டு இந்த ஆண்டு விழாக் கூட்டம் மிக வருந்துவதுடன், மேலும் தாமதிக்காமல் 'தமிழ்நாடு' என்று பெயர் வைக்குமாறு இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

நம் நாட்டு மக்களுக்குப் புரியாத — தெரியாத — தேவைப்படாத—கேடு பயக்கும் இந்தியை வடநாட்டு ஆட்சியாளர்கள் புகுத்துவதை வன்மையாகக் கண்டிப்பதுடன், அதனைக் கைவிடுமாறு இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

கோவை மாவட்ட பஞ்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு நன்மை செய்வதாகக் கருதி இம்மாவட்டத்திலுள்ள தொழிற்சங்கங்கள், தொழிலதிபர்களுடன் செய்துகொண்டுள்ள புதிய கோரிக்கை என்பதான ஒப்பந்தம் தொழிலாளர்களுக்கு மிகுந்த வேலைப் பளுவைச் சுமத்துவதுடன், மேலும் புதிதாகப் பஞ்சாலைகளில் தொழிலாளர் வேலை வாய்ப்பின்றி எதிர்காலத்தில் மிகப் பயங்கரமான சூழ்நிலையில் தொழிலாளர் வாழ [illegible] இக்கூட்டம் அச்சப்படுவதுடன், மேற்படி தொழிற்சங்கங்களின் தலைவர்கள் மீண்டும் சிந்தித்து தொழிலாளர்களின் இந்த அவல நிலை அகல வழிகோலுமாறு இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

பஞ்சாலைகளில் ஆண்டுதோறும் 'போனஸ்' என்ற பெயரால் தொழிலாளர்களுக்குத் தரப்படும் ஊதியத்திற்கு ஒவ்வொரு ஆண்டும் தொழிலாளர்—முதலாளி நல்லுறவு பாதிக்கும் நிலையிலேயே பேச்சுவார்த்தை நடத்தும் முறையை விட்டு, தொழிலாளர்—தொழிலதிபர்—அரசினர் ஆகியோர் கூடிப்பேசி, நிரந்தரமாக 'இலாபத்தில் சதவிகிதம்' என்ற முறையில் ஓர் ஒப்பந்தம் செய்ய எல்லா முயற்சிகளும் எடுக்குமாறு சம்பந்தப்பட்ட அனைவரையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

பஞ்சாலைத் தொழிலாளர்களுக்குப் 'பஞ்சப்படி' என்ற பெயரால் உலகப் பெரும் போர் நடந்த காலத்தில் குறிப்பிட்ட முறை, நாட்டிலே விலைவாசி ஏறிய நிலையில் நிரந்தரமாகி நிலைத்துவிட்டபடியாலும் 'பஞ்சப்படி' என்ற பெயரை நீக்கி, நிரந்தரச் சம்பளத்துடன் அதனை இணைக்க ஆவன செய்யுமாறு தொழிலதிபர்களையும், அரசினரையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

பஞ்சாலைத்தொழிலாளர் இன்சூரன்ஸ் திட்டம் கோவை மாவட்டம் முழுவதும் அமுலுக்கு வந்தும், உடுமலை வட்டப் பஞ்சாலைகளில் அமுலுக்குக் கொண்டுவாரதது பற்றி இக்கூட்டம் வருந்துவதுடன் உடனடியாக அமுல் செய்யுமாறு அரசினரையும் தொழிலதிபர்களையும் கேட்டுக்கொள்கிறது.

கோவை மாவட்டப் பஞ்சாலைகளில் இரண்டு ஆண்டு—மூன்று ஆண்டு ஆகியும் தொழிலாளர்களை இன்னும் நிரந்தரமாக்காமல் தாற்காலிகத் தொழிலாளர் என்றே வைத்திருக்கும் முறையை இக்கூட்டம வன்மையாகக் கண்டிப்பதுடன், [illegible] தரமாக்கும்படியும் கேட்டுக்கொள்கிறது.

தென்னகத்தில் தொழிற்சங்கங்கள், வடநாட்டு அரசியலுக்குட்பட்டு தென்னகத் தொழிலாளர்களுக்கும், அரசியலுக்கும் தவறான பாதை காட்டுவதை விட்டு நீங்க, தாயகப்பற்றும், தாயகத் தொழிலாளர் நலனில் அக்கறையும் கொண்டு, மாச்சரியங்களை விட்டு ஒன்றுபட்டுப் பணியாற்றுமாறு ஏனைய தோழமை கொண்ட தொழிற்சங்கங்களைக் [illegible]

## காவேரி நகரில் கழக முழக்கம்

10—9—57 மாலை 6-மணியளவில் தோழர் துரை மதிவாணன் தலைமையில் காவேரி நகர் தி. மு. கழகப் பொதுக்கூட்டம் நடைபெற்றது; பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், சட்டமன்றத்தில் நமது பணி குறித்தும், மாற்றுக்கட்சிக்காரர்களின் பித்தலாட்டங்கள் பற்றியும் விரிவாகச் சொற்பொழிவாற்றினர். மற்றும் திருச்சி மாவட்டச் செயலாளர் அன்பில்-தர்மலிங்கம் அவர்கள் விவசாயிகளின் வருங்காலம் பற்றிப் பேசினர்.

காவேரி நகர் வட்டக் குழுவின் கிளைகள், மற்றும் கீரனூர், புதுக்கோட்டைக் கழகங்கள் ஆகியவை சார்பில் மலர் மாலைகளும், கைத்தறித் துண்டுகளும் பொதுச்செயலாளருக்கு அணிவிக்கப்பட்டன.

பொதுச்செயலாளர் அவர்களின் தேர்தல் வழக்கு நிதிக்குத் தோழர் கருப்பையா அவர்களால் ரூ. 5 தரப்பட்டது. தோழர் சாமுவேல் ஆண்மகவுக்குச் 'செம்பியன்' எனப் பெயர் சூட்டப்பட்டுத் தேர்தல் வழக்கு நிதிக்கு ரூ. 2 தரப்பட்டது.

## வளவனூர் ஊராண்மைக் கழகத் தேர்தல்

### வெற்றி பெற்றவர்கட்கு பாராட்டு

13—10—57 மாலை 5 மணி அளவில், தி. மு. கழக ஆதரவாளர்களான அர்ப்பிசம்பாளையம் இ. வேணுகோபால், பருகரெட்டிப்பாளையம் பா. இராமச்சந்திரன் ஆகியவர்கள் ஊராட்சி மன்றத் தலைவர்களாகப் போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டும் பொருட்டு தோழர் ஏ. கோவிந்தசாமி எம்.எல்.ஏ. அவர்கள் தலைமையில் தேநீர் விருந்தும், பாராட்டு விழாவும், வளனூர் தி. மு. கழகச் சார்பில் நடைபெற்றன; தோழர் ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்களால் பாராட்டு இதழ் வாசித்துக் கொடுக்கப்பட்டது.

# வெறுங் கையோடு திரும்பினர் நிதி மந்திரி

## அமெரிக்கரும், இதரரும் அனுதாபம் மட்டுமே காட்டினராம்!

புதுடில்லி, அக். 25—

திட்டத்திற்கு நிதி உதவிதேடி அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி ஆகிய நாடுகளுக்குச் சென்றிருந்த டி.டி. கிருஷ்ணமாச்சாரி வெறுங்கையோடு திரும்பியிருக்கிறார்.

அந்த நாடுகளின் சர்க்கார்களும், இதர தனிப்பட்ட முதலாளிகளும் அனுதாபம் மட்டுமே, காட்டினர் என்றும், உடனடி உதவி எதும் கிடைக்காது என்றும், அனுதாபங்களை உருவான நிதி உதவியாக, கடனாக மாற்றுவது எப்படி என்பது இனிதான் யோசிக்கப்படவேண்டும் என்றும், அவர் மந்திரிசபைக் கூட்டத்தில் கூறினாராம்!

அந்த நாடுகளில் எல்லாம் அழமாட்டாத குறையாகக் கெஞ்சினார்—கொஞ்சினார் - காலைப்பிடித்தார்—பின், 'ஆசியாவில் ஜனநாயகத்திற்கே ஆபத்து வந்துவிடும்' என மிரட்டினார்—என்றாலும், பலன் பெறாதவராகவே திரும்பி வந்திருக்கிறார்!

★

### திட்டத்தின் அடிப்படை இலக்குகளுக்கு ஆபத்து?

புதுடில்லி, அக். 25—

சென்ற திங்கள் 17-ம் நாள் இந்தியாவின் நிதி அமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரி, அமெரிக்கா முதலிய நாடுகளுக்குச் சென்று, இந்தியப் பேரரசின் பேராசைத் திட்டத்திற்கு உதவியைத் தேட முயன்றார்.

நாட்டின் அந்நியச் செலாவணியில் சுமார் ரூ. 700 கோடி பற்றாக்குறை ஏற்பட்டுள்ளதை ஈடு செய்வதற்கு நல்லுறவு கொண்ட நாடுகள் முன்வரும் என்ற நம்பிக்கை தெரிவிக்கப்பட்டது.

இன்று அவர் டெல்லி திரும்பியுள்ளார்; எந்த அளவுக்கு உதவி கிடைத்துள்ளது என்று அவர் திட்டவட்டமாக அறிவிக்காததைக் கொண்டு, இப்போதைக்கு அவர் வெறும்கையுடன் திரும்பியுள்ளார் என்றே கருதவேண்டியுள்ளது.

அமெரிக்கா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகள் உதவியளிக்கக்கூடும் என்று அவர் நம்பிக்கை தெரிவித்துள்ளார்.

ஆனால், இந்தியாவுக்குத் தேவைப்படுவதாக மதிப்பிடப்பட்டுள்ள ரூ. 700 கோடி அளவுக்கு அந்த உதவிகளின் மொத்தம் இருக்குமா என்பதுபற்றித் தகவல் இல்லை!

இந்தியா திரும்பிய நிதி அமைச்சருடன் திட்டக் குழு கலந்து பேசி இப்போதைய நிலைமைக்கேற்ப திட்டத்திற்கு ஏற்றவாறு திட்டத்தைத் திருத்தவும், குறைக்கவும் முன்வரக்கூடும் என்று தெரியவருகிறது.

அடிப்படைத் திட்ட இலக்குகள் நிச்சயம் நிறைவேற்றபடும் என்று இதுவரை கருதப்பட்டதற்கும் மாறான நிலை உருவாகியுள்ளதாம்.

திட்டத்தின் அடிப்படை இலக்குகளில்கூட மாற்றங்கள் ஏற்படுத்தவேண்டிய அவலநிலை இந்தியப் பேரரசுக்கு ஏற்பட்டுள்ளதாம்.

அதற்குப்பிறகு, இந்தியப் பேரரசின் பேராசைத் திட்டம் மக்களுக்கு அறிவிக்கப்படக்கூடும் என்று டெல்லி வட்டாரத்தில் எதிர்பார்க்கப்படுகிறதாம்.

திட்டத்தின் அடிப்படை இலக்குகளில் எந்தப் பகுதிகளைக் குறைப்பது என்பதிலும், வடக்கிலும், தெற்கிலும் எஞ்சி நிற்கக்கூடிய திட்ட அடிப்படை இலக்குகளைப் பற்றி முடிவு செய்வதிலும் உடனே நிதி அமைச்சரும், திட்டக் குழுவும் ஈடுபடக்கூடும் என்று தெரியவருகிறது.

நேற்று முன்தினம் மத்திய உணவு அமைச்சர், நாட்டில் ஏற்பட்டுள்ள வறட்சியின் காரணமாக, உணவுத் தானியங்களை வெளிநாடுகளிலிருந்து அதிகமாக இறக்குமதி செய்ய வேண்டும் என்று பூனாவில் பேசியுள்ளதைக் கொண்டு, இப்போதைய உணவு நிலையைச் சமாளிக்க, அந்நியச் செலாவணியில், உணவுத் தானியங்களுக்கு மட்டும் ரூ. 100 கோடி அளவுக்கு இறக்குமதி செய்யவேண்டிய நிலை ஏற்படக்கூடும் என்றும் டெல்லி வட்டாரம் கருதுகிறது.

உணவுப் பங்கீடு முறையைப் புகுத்தி மக்கள் தேவையையும், உணவுத்தானிய விநியோகத்தையும் கட்டுப்படுத்த இந்தியப் பேரரசு முன்வரக்கூடும் என்று சிலர் டெல்லியில் கருதுகின்றனர்.

அந்நியச் செலாவணி வசதி தேவைப்படும் இறக்குமதிப் பொருள்கள்பற்றி வரிசைக் கிரமம் நிர்ணயிக்கப்படக்கூடுமாம்.

மாநிலங்களின் பற்றாக்குறை வரவு-செலவுத் திட்டங்கள், சிறு சேமிப்புத் திட்டத்தின் ஆமை வேகம், விலைவாசிகளின் உயர்வு, வாழ்க்கைத்தர உயர்வு அனைத்தும் 'மக்களுக்கு நல்ல எதிர்காலம்' என்று பேசிவந்ததற்கு மாறாக உள்ளதாம்!

'1958-59 ஒரு சோதனைக் காலம் என்றே கருதவேண்டிய நிலை உள்ளது' என்று டெல்லியிலிருந்து வெளியாகும் பிரபல ஆங்கில ஏடு ஒன்று தெரிவித்துள்ளது.

## கவர்னர் ஜான் மறைவு: சட்டசபை அனுதாபம்

சென்னை, அக். 25—

சென்னை சட்டசபை இன்று துவங்கியது.

மாநில கவர்னராயிருந்த எ. ஜே. ஜான் அவர்களின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானத்தை சர்க்கார் கட்சித் தலைவர் சுப்பிரமணியம் பிரரேபித்தார்.

எதிர்க் கட்சித் தலைவர் வி. கே. இராமசாமி முதலியார் தீர்மானத்தை ஆதரித்தார்.

உறுப்பினர்கள் அனைவரும் எழுந்து நின்று இரண்டு நிமிட நேரம் மௌனமாயிருந்து இறுதி வணக்கம் செலுத்தினர்.

அத்துடன், சபை நடவடிக்கைகள் ஒத்திவைக்கப்பட்டன.

## ரஷ்யாவிலிருந்து புதிய தூதுவர்

இந்தியாவில் ரஷ்யாவின் தூதுவராக இருக்கும் மென்ஷிகாவ் என்பாருக்குப் பதிலாக, பாந்தெலிமான் கோண்ட்ராடிவிச் போனமோராங்கோ என்பார் நியமிக்கப்பட்டிருப்பதாக வெளிவிவகார இலாகா தெரிவித்திருக்கிறது.

புதிய தூதுவர், போலந்து நாட்டில் ரஷ்யாவின் தூதுவராக இருந்து வருபவர் என்றும் ரஷ்யாவிலேயே துணை மந்திரியாகப் பதவிவகித்து வந்தவர் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தியாவில் ஜப்பான் நாட்டுத் தூதுவராக இருக்கும் யோஷிஜாவா என்பாருக்குப் பதிலாக, [illegible] புனாரா [illegible] ஹிரோஷி [illegible] என்பார் நியமிக்கப்பட்டிருப்பதாகவும் அறிவிக்கப்படுகிறது.

## அண்ணா முழக்கம்

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

''அமைச்சர்கள் பேசினால் இவ்வளவு பெரிய கூட்டம் வருவதில்லை; ஏன்? இங்கு வண்ணாரப் பேட்டையிலுள்ள ஒரு கடைக்காரரை, மற்றொரு நண்பர், 'இன்றைக்குக் கூட்டத்துக்குப் போகவில்லையா, மந்திரி பேசுகிறாரே'—என்று கேட்டால் அதற்கு அவர் என்ன பதில் சொல்லுகிறார்?—'மந்திரிதானே பேசுகிறார்; நாளையக் காலையில் பத்திரிகை பார்த்தால் எல்லாம் தெரிந்து கொள்ளலாம்; இதற்காக வியாபாரத்தைக் கெடுத்துக்கொண்டு கூட்டத்திற்கு எதற்குப் போகவேண்டும்?'—என்று அந்தக் கடைக்கார நண்பர் கூறிவிட்டு, வியாபாரத்தைக் கவனிப்பார். இதனால்தான், மந்திரிகள் பேசும் கூட்டத்துக்கு மக்கள் அதிகமாகக் கூடுவதில்லை.

''நம் கூட்டத்துக்கோ அப்படியல்ல; தி. மு. கழகக் கூட்டத்துக்குப் போகாதீர்கள்' என்று காங்கிரஸ்காரர்களும், மற்றவர்களும் தடுக்கிறார்கள்; இருந்தும், தெரிந்தோ தெரியாமலோ ஏராளமான கூட்டம் வருகிறது.

'மற்றொரு இலாபமும் உண்டு; நம் இயக்க இதழ்களைப் படித்தால்தான் உண்மைச் செய்திகளைத் தெரிந்துகொள்ளமுடியும். என்ற நிலை இருப்பதுதான், நம்முடைய பத்திரிகைகள் மிக நல்ல முறையில் பரவக் காரணம். எவ்வளவோ, குறைபாடுகள்—வண்ணக் குறைவுகளுடன் பஞ்ச நிலையிலிருந்தாலும், நமது இயக்க ஏடுகள்—நாளிதழ்—கிழமை—மாத இதழ்களைச் சேர்த்தால் இலட்சக் கணக்கில் செலவாகக் காரணம், மற்றப் பத்திரிகைகள் நம் செய்திகளை இருட்டடிப்புச் செய்வதுதான். இனி என்னைப் பொறுத்தமட்டில் இந்த இருட்டடிப்பைப் பற்றி வருத்தப்படமாட்டேன்.

''இயக்கத்தின் இந்த வளர்ச்சியை எப்படிப் பயன்படுத்திக்கொள்வது என்பதை நீங்களும் நானும் ஆர அமர உட்கார்ந்து யோசிக்க வேண்டும்.''

(பேச்சு முடியவில்லை)

## மத்திய சர்க்கார் ஊழியர் சம்பள விகிதங்கள்

### கருத்தறிவிக்குமாறு மக்களைக் கேட்கிறது கமிஷன்

புதுடில்லி, அக். 24—

மத்திய சர்க்கார் ஊழியர்கள், அவர்களின் சங்கப் பிரதிநிதிகள் இவர்களிடமிருந்து மட்டுமின்றி, பொதுமக்களும் மத்திய சர்க்கார் ஊழியர்களின் சம்பள விகிதங்களைப் பற்றிக் கருத்தறிவிக்குமாறு சம்பளக் கமிஷன் கேட்டுக்கொண்டிருக்கிறதாம்.

சர்க்கார் ஊழியர்களும்கூட, தனிப்பட்டமுறையில் தங்களின் கருத்தை அறிவிக்கலாம் என்றும் கேட்கப்பட்டிருக்கின்றனர்.

இந்தக் கருத்துக்கள் எல்லாம் நவம்பர் இறுதிக்குள் கமிஷனுக்குக் கிடைக்க வேண்டுமாம்.

## செங்கற்பட்டு

### நகர வாக்காளர்களுக்கு:

★

''செங்கற்பட்டு நகர எல்லைக்குள் இருக்கும் தி. மு. கழகத் தோழர்களும், பொது மக்களும் தங்கள் பெயர்கள் வாக்காளர் பட்டியலில் பதிவு செய்யப்படாமலிருந்தாலும் விடுபட்டிருந்தாலும் உடனடியாக செங்கற்பட்டு தாலுக்கா அலுவலகத்தில் சென்று தேர்தல் தாசில்தாரிடம் தங்கள் பெயரைப் பதிவு செய்துகொள்ள வேண்டுகிறேன்''

என்று, செங்கற்பட்டு நகர தி. மு. கழகச் செயலாளர் செ. கோ. விசுவநாதன் அறிவிக்கிறார்.

## கழகக் கூட்டங்கள்

★

**சென்னை—புரசை:**

ஆதியப்ப முதலித் தெருவில் 29—10—57 மாலை 6 மணிக்கு

தலைவர்: கா. வேற்றியழகன்

பேசுவோர்:

அண்ணா

க. அன்பழகன் எம்.எல்.ஏ.

கே. ஏ. மதியழகன்

★

**தென்னிலை:**

என். எஸ். கே. திடலில் 29—10—57 மாலை 5 மணிக்கு

தலைவர்: என். இரத்தினம்

பேசுவோர்:

இரா. நெடுஞ்செழியன்

மு. குழந்தைவேல் எம். சி.

சண்முகம்

★

**முத்துகிருட்டிணபுரம்:**

29—10—57 இரவு 7 மணிக்கு

பேசுவோர்:

ஆ. அண்ணாமலை

இரா. நல்வினைவேல்

தா. டேவிட், வீ.சங்கரலிங்கம்

கே. சேர்மத்துரை

★

**வேட்டன்விடுதி:**

28—10—57 இரவு 8½ மணிக்கு

தலைவர்: இரா. தங்கமணி

பேசுவோர்:

இரா. நெடுஞ்செழியன்

கே. வி. சுப்பையா

இரா. முகிலன்

மு. இபலரசன்

### சென்னை — மல்லிகாபுரம் அறிவொளி மன்றப் பரிசளிப்பு விழா

27—10—57 மாலை 6-30 மணிக்கு, சென்னை மவுண்ட் ரோடு மல்லிகாபுரம் அறிவொளி மன்றச் சார்பில், தோழர் சுப்பிரமணியம் தலைமையில் தோழியர் அலமேலு அப்பாதுரை பரிசுகள் வழங்குவார். தோழர்கள் கா. அப்பாதுரை, என். கிருட்டினன், பொ. மா. வே. சோமசுந்தரம் எம்.சி., தேவராஜ், வே. பாலகிருட்டினன் ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

## அண்ணா

### சுற்றுப்பயணம்

அக்.

27: நாகப்பட்டினம்

29: சென்னை—புரசவாக்கம்

30: கோடம்பாக்கம்

நவ.

1: கூடுவாஞ்சேரி

### முன்னணி கழகக் கூட்டம்

27—10—57 மாலை 5-மணிக்கு சென்னை—திருவல்லிக்கேணி சுப்பராய செட்டித் தெரு 9 எண்ணுள்ள 'முன்னணிக் கழக' மனையில் தோழர் கே. சின்னப்பன் தலைமையில் 'இந்தி கட்டாயப் பாடமாவது சரியா?' என்னும் பொருள்பற்றி தோழர் எஸ். இராதாகிருட்டினன் பேசுவார்.

### சென்னை 25-வது வட்ட தி.மு.க. பொதுஉறுப்பினர்கட்கு:

27—10—57 மாலை 5-மணிக்கு மேற்படி வட்டத் தி. மு. க. பொதுஉறுப்பினர் கூட்டம் கழக மனையில் நடைபெறும். 29—10—57-ல் நடைபெறவிருக்கும் அண்ணா கூட்ட ஏற்பாடுகள் பற்றி ஆலோசிக்கப்படும்.

### புது வண்ணை வள்ளுவர் இளைஞர் மன்ற உறுப்பினர்கட்கு:

27—10—57 மாலை 7 மணிக்கு மேற்படி மன்றக் கட்டிடத்தில், உறுப்பினர் ஆலோசனைக் கூட்டம் நடைபெறும்.

### சென்னைக் கல்விச் சங்கம்

27—10—57 மாலை 4-மணிக்கு பட்டாளம் ஸ்டாரன்ஸ் ரோடு ஆண்கள் பள்ளியில் தோழர் வ. சுப்பிரமணியம் தலைமையில் 'தமிழ் நெஞ்சம்' என்னும் பொருள்பற்றி தோழர் தா. இரா. செயராமன் சொற்பொழிவாற்றுவார்.

### பெரியகுளம் தி மு. க. பொது உறுப்பினர்கட்கு:

27—10—57 மாலை 6-மணிக்கு தென்கரை தமிழ் இலக்கிய மன்றத்தில் பெரியகுளம் தி. மு. கழகப் பொதுஉறுப்பினர் கூட்டம் நடைபெறும். பல முக்கிய பிரச்சினைகள் ஆய்வுக்குவரும்.

## ஓட்டல் தொழிலாளருக்குப் பாதுகாப்பு

### வேலை நிலைகளை ஒழுங்குப்படுத்த சட்டம் வருகிறது

சென்னை, அக். 25—

தமிழ்நாட்டில் உணவு விடுதிகள் (ஓட்டல்கள்), அவைபோன்ற இதர நிறுவனங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்புத் தரும் நோக்குடன் வேலை நிலைகள், இதர தொடர்புடைய விவகாரங்கள் இவற்றை ஒழுங்குபடுத்துகிற மசோதா ஒன்றினை, சர்க்கார், இந்த சட்டசபைக் கூட்டத் தொடரில் கொண்டுவரவிருக்கின்றது. அந்த மசோதா சர்க்கார் விசேஷ கெஜட் ஒன்றில் வெளியிடப்பட்டிருக்கிறது.

## அகிலம் விரும்பும் தென்னாட்டு வளம்!

### மிளகு, முந்திரிக்குக் கிராக்கி

செக்கோஸ்லேவேகியா, போலந்து, பல்கேரியா, ருமேனியா, கிழக்கு ஜெர்மனி, டென்மார்க் சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளில் மிளகுக்குப் புதிய கிராக்கி ஏற்பட்டுள்ளதாம்.

1955-56-ல், ரூ. 30 இலட்சம் மதிப்புள்ள 1,100 டன் மிளகு ஏற்றுமதி செய்யப்பட்டுள்ளதாம். ரஷ்யா, 1955-56-ல் 675 டன் மிளகு இறக்குமதி செய்தது என்றும், ஆனால் இந்த ஆண்டில் 3,950 டன் மிளகு இறக்குமதி செய்ததாகவும் தகவல் தரப்பட்டிருக்கிறது.

1955-56-ம் ஆண்டில் மொத்தம் 14,840 டன் மிளகை இந்தியா ஏற்றுமதி செய்துள்ளதாம்.

1956-57-ல் முந்திரிக்கும் இந்த நாடுகளில் தேவை அதிகரித்துள்ளது என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## சட்டசபை நிகழ்ச்சி நிரல்

சென்னை, அக். 26—

சென்னை சட்ட மன்றத்தின் நிகழ்ச்சி நிரல் இதுவரை ஆங்கிலத்தில் மட்டும் வழங்கப்பட்டு வந்துள்ளது.

நேற்றுமுதல் தமிழில் வழங்கும் முறை அமுலாகியுள்ளது.

## 'நம் நாடு' இதழ் விற்பனையாளர் தேவை

கீழ்க்கண்ட ஊர்களில் 'நம்நாடு' இதழை விற்பனை செய்வதற்கு விற்பனையாளர்கள் தேவை; நிபந்தனைகளுக்கு விண்ணபித்துக் கொள்க:—

பூதலூர்

திண்ணனூர்

கல்லிடைக்குறிச்சி

இராஜசிங்கமங்கலம்

பேலூர் (சேலம் மாவட்டம்)

ஆலமரத்துப்பட்டி (கரூர் வட்டம்)

பாகசாலை (மாயூரம் வட்டம்)

சத்திரப்பட்டி

—நிர்வாகி: 'நம் நாடு'

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம். சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

